உ

சிவமயம்

# மேன்மக்கள் நகரத்தார்

- கவிதை நூல்

(எளிய தமிழில் இனிய நடையில்
ஓர் இனத்தின் வரலாறு)













கவிஞர்
சேவு. முத்துக்குமார்

செந்நிலா பதிப்பகம்

உ
சிவமயம்

# 'மேன்மக்கள் நகரத்தார்' – கவிதை நூல்

**(எளிய தமிழில் இனிய நடையில் ஓர் இனத்தின் வரலாறு)**



**கவிஞர்**

**சேவு. முத்துக்குமார், காரைக்குடி**



**செந்நிலா பதிப்பகம்**

## நூல் விபரம்


| | | |
|---|---|---|
| முதல் பதிப்பு | : | ஜுன் 2019 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| நூல் பெயர் | : | மேன்மக்கள் நகரத்தார் |
| நூல் பிரிவு | : | கவிதை நூல் |
| பக்கங்கள் | : | 56 |
| கணினி அச்சு | : | பாரத் பிரிண்டர்ஸ், காரைக்குடி<br>செல்: 9865043093 |
| வெளியீடு | : | செந்நிலா பதிப்பகம்<br>89, வெங்கடாச்சலம் செட்டியார் தெரு,<br>நா.புதூர், காரைக்குடி – 630 001.<br>செல்: 98429 6558 |
| பதிப்பாளர் | : | பொறியாளர். S.ஜெயச்சந்திரன், B.E., |
| விலை | : | 50/- |
| அலைபேசி | : | 9443288931, 9047496363,<br>7339280720 |




**சமர்ப்பணம்:**

எனது அன்பு உடன்பிறப்புகள்

**அண்ணன் சேவு.மனோகர்**

**ஆச்சி. சு. நிர்மலா**

30-2



**Dr.Justice AR.Lakshmanan**
Former Judge, Supreme Court of India
Former Chairman, Law Commission of India
Former Chief Justice of
- High Court of Kerala
- High Court of Rajasthan
- High Court of Andhra Pradesh



# வாழ்த்துரை

## நகரத்தார் சமூகம் பற்றி கவிதை மழை பொழிந்துள்ள ஆசிரியருக்கு உச்சநீதிமன்றமே வாழ்த்துகிறது!

திரு.சேவு.முத்துக்குமார் திறம்பட வடித்துள்ள, மேன்மக்கள் நகரத்தார் கவிதை நூலைப் படித்து இன்புறும் வாய்ப்பை நல்கிய ஆசிரியருக்கு எனது மனங்கனிந்த வாழ்த்துக்கள்!

ஆசிரியரின் பன்முக ஆற்றல் கண்டு மகிழ்வுற்றேன். தமிழாசிரியராக, நூலாசிரியராக, சதுரங்க செயலராக எண்ணற்ற வீரர்களை உருவாக்கியது. நாட்டுநலப்பணித் திட்ட ஒருங்கிணைப்பாளராக, சமுதாய விழிப்புணர்வு நாடகங்களை மாணவர்களைக் கொண்டு நிகழ்ச்சிகள் நடத்தியது. தமிழக அரசின் விருது பெற்றவராக. எல்லாவற்றிற்கும் மேலாக அவரது கவிபாடும் திறமை. இளைய தலைமுறையினர் அறிந்துகொள்ளும்பொருட்டு எளிய நடையில் 105 பாடல்களை அறுசீர் விருத்தாப்பாவில் தற்போது எழுதிய பாராட்டுக்குரிய திறமை என ஆசிரியர் திரு.சேவு. முத்துக்குமாரைப் பற்றி எழுதிக்கொண்டே பயணிக்கலாம்.

Residence : No.16, Third Street, Karpagambal Nagar, Kottivakkam, Chennai - 600 041.
Phone: +91 44 25418888 Cell: +91 93111 12222, 99418 11111

Meenakshi Illam, No.6, Alambattar Street, Devakottai - 630 302. Sivaganga Dist. Tamilnadu.
Phone: +91 4561 262248

நகரத்தார் குலம் ஒப்பிலா உயர்ந்த குலமென்பதையும் அத்தகையோர் உலகில் இல்லையென்பதையும் நகரத்தார்களின் திருமணம், அவர்தம் ஆற்றிய கல்விப்பணி, அறப்பணி, ஆலயப்பணி, நாட்டிய நகரக்கோயில் ஒன்பது. பண்டிகைகள், சைவப்பணி, இறைவழிபாடு, செட்டிநாட்டுப்பலகாரம், தமிழ்ப்பணி, உறவுப்பெயர்கள், தொழில்வளம், தோற்றப் பொலிவு, கட்டிடக்கலை, சிறப்பு நிகழ்வுகள் என ஒவ்வொரு துறையிலும், நகரத்தார் மாண்பினை படம்பிடித்துக் காட்டுகிறார் ஆசிரியர்.

மரகத விநாயகர் பூஜைசெய்து
மங்கல ஈஸ்வரன் தரிசித்து
இரத்தின வாணிகம் செய்தோங்கி
ராஜ போகமாய் வாழ்ந்தார்கள்
தங்கக் கலசம் இல்லத்தின்
தலைமேல் ஜொலிக்கும் அதன்மேலே
சிங்கக் கொடியைப் பறக்கவிட்டு
சீர்பெற் றுயர்ந்த சமுதாயம்

என்று நன்னயம் மிக்க நகரத்தார்கள் பற்றி கவிதை வடிவில் ஆசிரியர் நமக்கு அளித்திருப்பது பாராட்டுக்குரியது

சைவ ராக இருந்திடினும்
சமரச ஞானம் உடையவர்கள்
சிவனை வழிபடும் வேளையிலும்
திருமால் வணக்கம் செய்திடுவர்

என்ற கவிதை வாயிலாக சமரச ஞானம் உடையவர்கள் நகரத்தார்கள் என்பதையும்,

அன்பே உருவாய் ஆனவராம்
அறிவிற் சிறந்த பட்டினத்தார்
தன்வினைத் தன்னைச் சுடுமென்று
தத்துவம் சொல்லித் துறவேற்றார்

என்று பட்டினத்தாரை நம்முன் நினைவு கூர்ந்துள்ளார் ஆசிரியர்.

நகரத்தார் சமூகத்தைப்பற்றி இதுவரை பல புத்தகங்கள் கட்டுரை வடிவில் வந்திருக்கின்றன. இந்நூலை கவிதை வடிவில் சேவு. முத்துக்குமார் தந்திருப்பது சிறப்பு.

வட்டித் தொழிலில் நேர்மையினை
வகையாய்க் காட்டி பொருள்சேர்ப்பர்
செட்டிமகனாம் முருகனுக்கு
திசைகள் எட்டும் கோயில்கள்
கட்டி, கடல்போல் பொருளீட்டி
கணக்காய்ச் செலவு செய்பவர்கள்
எட்டு பிள்ளை பெற்றாலும்
செட்டிப் பிள்ளைக் கீடுண்டோ!

என கவிதை மழை பொழிந்துள்ள ஆசிரியருக்கு உச்ச நீதிமன்றமே வாழ்த்துகிறது.

இன்றைய இளைய தலைமுறைக்கு நம் நகரத்தார் சமூகம் பற்றியும்,பாரம்பரியத்தைப் பற்றியும் ஆற்றிய பல்துறைப்பணிகள் குறிப்பாக ஆலயப்பணி, ஆன்மீகப்பணி பற்றி தெரிந்திருக்க நியாயமில்லை. பலருக்கு தான் எந்த நகரக்கோவிலைச் சார்ந்தவன் என்பது கூடத் தெரியாது.

நகரத்தார் இளைய தலைமுறையினர் இன்று தமது புத்திக் கூர்மையினாலும், அறிவாற்றலினாலும் பலதுறைகளில் குறிப்பாக பொறியியல், மருத்துவம், கல்வித்துறை, தொழில்துறை, தற்போது வழக்கறிஞர்களாக பலர் நம் நாட்டிலும், அயல் நாடுகளிலும் பணிபுரிந்து வருகிறார்கள். இந்நூல் ஒவ்வொரு நகரத்தார் இளைஞனிடமும் இருக்க வேண்டிய ஒன்று. இது அவர்கட்கு நம் சமூகத்தின் வரலாற்றைப் பற்றி அறிந்துக் கொள்ள வழிகோலாக அமையும்.

சேவு.முத்துக்குமார் திறமைக்கு இந்நூல் ஒரு எடுத்துக்காட்டு. அவர் தம் திறமையைப் பாராட்ட எனக்கு கவிதை எழுதத் தெரியாது. ஆனால் மனமார அவரது வளர்ச்சிக்கு பாராட்டும் ஆசியும் வழங்க முடியும். ஆசிரியரால் என் போன்ற இரணிக்கோயில் நகரத்தார்கள் பலரும் பயனடைவார்கள் என்பதில் ஐயமில்லை. வாழ்க அவர் சமூகத் தொண்டு! .

வளர்க, வாழிய, சிறக்க, சீர்பெருக! .

டாக்டர்.ஜஸ்டிஸ் ஏ.ஆர். லெட்சுமணன்

Office : Dev Regency, 1st Floor, No. 11, First Main Road, Gandhi Nagar, Adyar, Chennai - 600 020. Ph: +91 44 24423188, Fax: +91 44 42121858
Email : justicearl@yahoo.com
jusarlakshmanan@gmail.com
justicear142@gmail.com
Web : www.drjusticearlakshmanan.com

# பாருள்ளளவும் நின் பா நிற்கும் நிலைத்து..

## மதிப்புரை



**திரு. மெ. அழகப்பன்**
மேனாள் கிளை மேலாளர்,
சக்தி பைனான்ஸ், திருச்சி.

ஆதி முதலே பாடுபட்டுச் சேர்த்த பொருளில் ஒருபங்கை வேண்டியோர்க்கு வேண்டுவண்ணம் கொடுத்துதவும் நகரத்தார் சமுதாயம், ஒப்பற்ற உயர்ந்த சமுதாயம். 'மேதினியில் இட்டார் பெரியோர்' என்பதற்கிணங்க, தொண்டுபல ஆற்றி இன்றளவும் தொய்வறியாத தொன்மைச் சமுதாயம், நகரத்தார் சமுதாயம்.

இத்தகு சிறப்புவாய்ந்த சமுதாயத்தை மிகுதியும் உள்வாங்கி தம்பி சேவு. முத்துக்குமார் 'மேன்மக்கள் நகரத்தார்' என்ற தலைப்பில் அறுசீர் விருத்தப்பாவில் பாடியுள்ள 105 கவிதைகள், வள்ளுவனின் முப்பால் போல சுருங்கக்கூறி, படிப்பவரின் சிந்தனையைத் தட்டி எழுப்பி, நிரம்பப் பெற வைக்கிறது எனக் கூறின் அஃது மிகையாகாது.

'வாழும் தலைமுறை அறிந்திடவே' என கற்பகப் பிள்ளையாரைத் துணைக்கழைத்து வானுயர் புகழுடை செழுமைசேர் செட்டிமக்களின் மேன்மையினை வளமிகு வளர்தமிழில், கவிதைச் சரமாகத் தொடுத்திருக்கும் தம்பி முத்துகுமாரின் கவிதை நூல் வெளியிடும் முன்பே எனக்குப் படிக்கக் கொடுத்து வைத்தமை யான் பெற்ற பேறு.

தம்பியை ஒத்த வயதுடையவர்கள் மரபுக் கவிதைகள் எழுதும் மரபிலிருந்து விலகிச் செல்லுகையில், மரபோடு கவிதை எழுதிச் சிறப்பித்தமையைப் போற்றுகிறேன்.

ஒரு குலத்தின் சிறப்பைக் கூறுகையில் உயர்ந்து நின்றவர்களைப்பற்றி நிறையக்கூறி, குலப்பெருமையை நிலைநாட்டுவதில் இருந்து விலகுவோர் இடையில், தனிமனிதத் துதியைத் தவிர்த்து, இனியவை செய்த இனப்பெரியாரைச் சுட்டி, கனியமுதத் தமிழில் கவியாத்த தம்பியின் திறன் கண்டு வியக்கிறேன்.

'மன்ன ருக்குப் பின் னோராய்
மன்றில் அழைக்கப் பட்டார்கள்'

என்று, மன்னர் குலமும் போற்றிய மக்களாக நகரத்தார் திகழ்ந்தார்கள் எனச் சுட்டுவது அருமை.

'நாயன்மார் அறுபத்து மூவருள் ஐவர் நம்மவர்' என்றும், 'காப்பியங்கள் ஐந்தில் மூன்று நகரத்தார் தொடர்புடையது' என்பதை

செந்தமிழ் நாட்டுக் காப்பியங்கள்
சிலம்பு வளையா பதியினையும்
வந்தனைக் குரிய மேகலையும்
வடித்துக் தந்த மேன்மைக்குடி

என்று சொல்லுமிடத்து உண்மைத்தன்மை மேலோங்குகிறது.

நகரத்தாரின் அறப்பணிகளாகச் சாலை அமைத்தல், நிழல் தரும் மரங்களை நட்டல், சுமைதாங்கிக் கற்களை நடுதல், நீர்ப்பந்தல் அமைத்தல் என அடுக்கிக் கொண்டே போவது மிகச் சிறப்பு.

நன்மை செய்வதற்கு, மனதில் ஊனமின்றி இருக்க வேண்டும் என்ற சொல்லாடல் கண்டு மிகவும் வியப்புற்றேன்.

'கோயில் கூரையில் விரிசல்வரின்
கூப்பிடு வார்கள் செட்டியாரை...'

கோயில் கட்டி, குளங்கள் வெட்டி, வேத பாட சாலை அமைத்து, பசுமடங்களைக் கட்டும் செட்டியார்களின்

தாயுள்ளம் இவரது கவிதை வாயிலாக வெளிவருவது அருமை.

முப்பால் நெறியைக் கூறுகையில், ஆச்சி சொல்ல அவ்வழி செல்வார் செட்டியார் என்பதை அவருக்கே உரித்தான வகையில்,

'அப்படி இப்படி இருந்தாலும்
ஆச்சி சொல்லே வேதமென்று
ஒப்புக் கொண்டு வாழ்வதனால்
உலகில் நித்தம் சிறக்கின்றார்'

எனச் செட்டியாரைக் கூறுவது உண்மை.

'கட்டிச் சமத்தி என்பார்கள்
கலைநயம் மிக்க ஆச்சிகளை' – எனக்கூறி

'மெல்லப் பேசிபின் அதிர்பவர்கள்' என்று ஆச்சிகளை நயமாகச் சுட்டுவது சிறப்பு

நம்மவர் கட்டடக்கலை, திருமணம் நிகழும் முறை, மணிவிழா முதல் நூற்றாண்டு விழா வரை, உறவுப் பெயர்களுக்கு உகந்த விளக்கம், அணிகலன்கள், உணவு வகைகள், படைப்பு, சிறப்பு நிகழ்வுகள் என இக்கால இளைஞர்கள் அறிந்து கொண்டு, பின்பற்றும் வண்ணம், கவிதைகளை எளிய தமிழில் படைத்திருப்பது பாராட்டத்தக்கது.

'ஒப்பில்லாத உயர்ந்தகுலம்
உலகில் உண்டோ சொல்லம்மா!'

என வினா தொடுத்து, விடையும் பகர்ந்துள்ள தம்பி முத்துக்குமாரின் இந்நூல் இனிவரும் காலங்களில் நம்மவர்கள் வாழ நல்வழிகாட்டியாக அமையும் என்பதில் எனக்கு ஐயம் ஏதுமில்லை.

‘உண்ணாமலைத் தாயார்
உவந்தீன்று பெற்ற
ஒப்பற்ற பிள்ளை!
எண்ணியபோதெல்லாம் கவி
எழுதும் திறனுடைய முத்துப்பிள்ளை!
கண்ணியம் நிறை காரைநகரிலிருந்து
கல்வி புகட்டும் தந்நிகரில்லா
முத்துக்குமார், நகராப்புகழோடு
வாழிய! நீடு!

என வாழ்த்துவதோடு, மரபுக்கவிதைகள் மறையும், மறக்கும் நிலையில் தடையின்றி கவிதைத் தரத் தகுதியுடையோய் நீ... இன்னும் இயற்று தங்குதடையின்றி எனப் போற்றுகிறேன்.

நகரத்தார் பெருமையினை உன்னைப்போல் பகர மரபுக் கவிதை வழி யாரிருப்பர் என்று எனக்குத் தோன்றவில்லை.

நகரத்தார் இல்லங்களை அலங்கரித்துப் பயன் நல்கும் பாங்குடன் படைக்கப்பட்ட இந்நூலை திருமண விழா, மணிவிழா, நகரத்தார் கோயில்கள் குடமுழுக்கு விழா என பல்வேறு நகரத்தார் விழாக்களில் வாங்கி அன்பளிப்பாக நல்கினால் எதிர்கால இளம் தலைமுறை பண்பாடு, மரபு மாறாமல் ஏற்றம் பெறும், நம் குலப் பெருமையை நன்கு தொழும்.

தம்பி முத்துக்குமார்! பாருள்ளளவும் நின் பா நிற்கும் நிலைத்து!



உ

## அணிந்துரை

**நகரத்தார் இல்லங்களில் இருக்க வேண்டிய காலப்பெட்டகம்**



திருக்குறள் தேனீ. நல்லாசிரியர்.

கவிஞர். **மெ. செயம்கொண்டான்**

நிறுவனத்தலைவர், வள்ளுவர் பேரவை

காரைக்குடி.

அன்பிற்கினிய அண்ணன் இலட்சிய ஆசிரியர், நாடகக்கவிஞர் சேவு.முத்துக்குமார் அவர்கள் எழுதிய 'மேன்மக்கள் நகரத்தார்' புத்தகம் படிக்கப் பெற்றேன்.நகரத்தார்களின் மிகப் பெரிய சிறப்பு, ஆற்றல் நிரம்பியவர்கள் எனினும் அடக்கம் உடையவர்கள் என்பது தான்.

இந்தியத் தாய்க்கு எத்தனையோ மாநிலப் பிள்ளைகள் இருந்தாலும் நாடு எனும் சிறப்பிற்கு உரிய பிள்ளை தமிழ்நாடு தான்.தமிழ்நாட்டில் எத்தனையோ ஊர்கள் இருந்தாலும் 96 ஊர்களை உள்ளடக்கிய குட்டிநாடு. குட்டிநாடு என்றாலும் கெட்டிநாடு. அதுவே நம் செட்டிநாடு அத்தகைய செட்டிநாட்டின் பெருமையை 105 அறுசீர் விருத்தப் பாடல்களில் படிப்பவர் மனதில் எளிமையாகப் பதியும் வண்ணம் அருமையாய்ப் பதிவு செய்திருக்கிறார்.அன்பு அண்ணன் சேவு.முத்துக்குமார் நாளைய தலைமுறை நகரத்தார் பிள்ளைகளுக்கு நம்மவர் பெருமை, பண்பாடு அறியப்பட வேண்டும் என்ற நோக்கில் அமையப் பெற்றிருக்கும் இந்நூல், ஒவ்வொரு நகரத்தார் வீடுகளிலும் இருக்க வேண்டிய பண்பாட்டுப் பெட்டகம்

என்றால் அஃது மிகையாகாது. மென்மையானவர்கள் அதனால் மேன்மையானவர்கள் என்று நான் அடிக்கடி நம்மவர் பெருமையைக் குறிப்பிடுவேன். நகரத்தார் அல்லாதவர்களும் நகரத்தாரின் பெருமையைக் குறிப்பிடுவது தான் அவர்கள் சிகரத்தார் என்பதற்குத் தக்க சான்று, 'கற்பகப்பிள்ளை துணையிருப்பான்' என்று பிள்ளையார் சுழிப் போட்டு நூலைத் தொடங்கியிருக்கிறார்.

'தன்னேர் இல்லா மக்களெனத்
தகுதி பெற்ற நகரத்தார்'

மன்னருக்குப் பின்னோர் என்பதை மேதினி உணர பாடல்வழித் தந்திருக்கிறார். 'ஆதிக்குடி மூத்தக்குடி' நாம் என்பதை மெய்ப்பித்திருக்கிருக்கிறார். நாகநாட்டைப் பூர்வீகமாகக் கொண்ட பழம்பெருமையைப் பேசியிருக்கிறார். சேக்கிழாரின் செந்தமிழ் நூலான பெரியபுராணத்தில் **ஐவர் நகரத்தார்** என்பதைச் சுட்டுகிறார். இறைவனுக்கு அம்மை அப்பன் தந்த குலம் நம் குலம் என உரிமை பேணுகிறார். **கண்ணகி பட்டினத்தார்** எனப் பட்டியலை நீட்டி பாட்டியலாய்த் தருகிறார். அறப்பணி ஆலயப்பணி என அடுக்கடுக்காய் மிடுக்குடன் பாடி இவர்போல் யாருளர்? என நம்மைக் கேட்கிறார். நாட்டிய கோயில் ஒன்பது என இரு பாடல்களின் வாயிலாகத் தெளிவாய்க் காட்டுகிறார்.

'கோயில் கூரையில் விரிசல்வரின், கூப்பிடு வார்கள் செட்டியாரை' எனும் இருவரிகளும் நம்மவர் கோயிற்பணி செய்யும் திறனை வெளிக்காட்டும் வரிகள். கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம் என்ற வார்த்தைக்கு உயிர் கொடுத்த பெருமை நகரத்தார்க்கு உண்டு என்பதை வரலாறு அறியும், காரைக்குடி கண்டெடுத்த கல்வி

காமதேனு அழகப்பரைச் சுட்டுகிறார். சைவம் வளர்த்தவர் நகரத்தார் என்பதை உணர்த்துகிறார். பெருங்காப்பியங்கள் ஐந்தில் மூன்று நகரத்தார்க்கு உரியது என்பதை நானிலம் அறிய விளக்குகிறார். மாட்டு வண்டியும், கூட்டு வண்டியும் ஓட முடியாத குக்கிராமத்தில் கூடத் தன் பாட்டு வண்டியை ஓட்டிய கண்ணதாசன் எனும் கவிப் பெட்டகத்தை காட்சிப் படுத்துகிறார். தொழில்வளம் பற்றி எடுத்துச்சொல்லி

'எட்டுப் பிள்ளை பெற்றாலும்
செட்டிப் பிள்ளைக் கீடுண்டோ...'

செட்டிப்பிள்ளையின் கெட்டிக்காரத் தனத்திற்கு ஈடுண்டோ? எனக் கேட்கிறார். ஆச்சி செட்டியாரின் தோற்றப் பொலிவை, வாழும் மனையின் மாண்பை கவிதையால் பேசுகிறார்.முகப்பு, வளவு என வகைப்படுத்தி அரசின் அறிவுருத்தலுக்கு முன்பே மழைநீர் சேகரிப்பை உலகிற்கு அறிமுகப்படுத்திய அறிவுக்குலம் நகரத்தார் குலம் என்பதை நல்லபடி எடுத்துச் சொல்கிறார். வெளிச்சம் பரப்பும், அரண்மனை போன்ற செட்டிநாட்டு வீட்டாரின் சாளரச் சிறப்பை பறைசாற்றுகிறார். பத்தி,பட்டியக்கல் பற்றிப் பாடல் வழி உயர்த்திப் பேசுகிறார்.

'காக்கை கரவாக் கரைந்துண்ணும் ஆக்கமும் அன்ன நீரார்க்கே உள' என்ற தெய்வப் புலவனின் சுற்றந்தழாலைப் போல உறவு பேணி வாழ்ந்த கூட்டுக்குடும்ப உயர்வை, உறவின் பெயர் சொல்லும் உன்னதத்தை படிப்பவர் மனத்தில் பசுமரத்தாணிப் போலப்பதியும் வண்ணம், தம் எண்ணத்தை எழிற்றமிழ் வரிகளால் பதிவு செய்கிறார். உலகமே வியக்கும் ஆச்சிமார்களின் கைப்பக்குவத்தால் விளையும் செட்டிநாட்டுப் பலகாரத்தை இரண்டு பாடல்வழி சொல்லி நாவில் உமிழ் சுரக்க வைக்கிறார்.

'தென்புலத்தார்' என்று தெய்வத்திற்கு முன் முன்னோர்களைப் படைத்த வள்ளுவன் வழிநின்று படைப்பு நடத்தும் நம்மவர் மேன்மையை மெருகூட்டிச் சொல்கிறார். பிள்ளையார் நோன்பு, பொங்கல் பணம் எனத் தொடங்கி இல்லங்களில் இராமாயணம் படிக்கும் நம் நகரத்தாரின் சிறப்புமிகு உள்ளங்களைச் செந்தமிழ்க் கவிவரிகளால் படம்பிடித்து நம் வீட்டுப் பிள்ளைகளுக்குப் பாடமாய்த் தருகிறார். நகரத்தார்களின் திருமணமுறை, அணிகலன்கள் விரதமுறைகள் என விளக்கி மகர்நோன்பின் மகத்துவத்தையும் எடுத்துரைக்கிறார். எந்தத் திருமணத்திலும் இல்லாத சாமான் பரப்பும் கலையை சாமான்யர்க்கும் புரியும் வகையில் எளிய தமிழில் தருகிறார்.

பல்லாண்டு காலம் பழைமை வாய்ந்த நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் பெருமையை வளர்ந்து வரும் தலைமுறைப் பிள்ளைகளும் அறிந்து கொள்ள வேண்டும், எனும் அவாவில் அண்ணன் சேவு.முத்துக்குமார் அவர்கள் எடுத்துக் கொண்டிருக்கும் முயற்சி மிகவும் பாராட்டத்தக்கது.நகரத்தார் இல்லங்களில் கண்டிப்பாக இருக்க வேண்டிய காலப் பெட்டகமான இந்தப் புத்தகத்தை அன்பளிப்பாக வழங்கி மனம் மகிழலாம்.

உள்ளதை உள்ளவாறு இயல்பு நவிற்சி அணியில் நகரத்தார் தம் பெருமைகளை எடுத்தியம்பிய இலட்சிய ஆசிரியர் அண்ணன் சேவு. முத்துக்குமார் அவர்களின் இலட்சிய உணர்வை நான் மனநிறைவோடு பாராட்டுகிறேன். அவர்தம் எழுத்துப்பணி தொடர என் இதயம் கனிந்த வாழ்த்துகள்!.



## உங்களோடு பேசுகிறேன்...

**சேவு. முத்துக்குமார்**

நான் பனிரெண்டாம் வகுப்புப் படிக்கும்போது, எனது பொதுத்தமிழ் துணைப்பாடப்புத்தகத்தில் இடம் பெற்றிருந்த சிறுகதை ஒன்றைப் படித்து மிகவும் வியந்து போனேன். சிறுகதையின் தலைப்பு 'மேன்மக்கள்', ஆசிரியர் நான் பெரிதும் போற்றும் பேராசிரியர், நற்கதைநம்பி டாக்டர். அய்க்கண், அவர்கள் கதையின் உட்பொருள்.

"கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்" - ஔவையாரின் வாக்கினை உட்பொருளாக்கி நிலை தாழ்ந்தாலும் அறம் தாழாத நம் இனத்துச் செட்டியாரைப் பற்றிய கதை அது. மாற்று இனத்தாரும் பாராட்டும் ஒரே இனமாக நகரத்தார் இனம் இருப்பதை அறிந்தேன், மகிழ்ந்தேன்.

ஒருநாள் பேராசிரியர் அய்க்கண் அவர்களிடமிருந்து அலைபேசி அழைப்பு, எனது 'படிப்பது நலமே'... நூலைப் படித்து விட்டு, மிகவும் பாராட்டினார் அவரிடம், வேண்டுகோள் ஒன்று விடுத்தேன்.

"அய்யா! நகரத்தார் இனத்தின் பெருமைகள் குறித்து 105 கவிதைகள் ஆக்கி, சிறு நூலாக வெளியிட உள்ளேன். நூலுக்கு தங்கள் சிறுகதைத் தலைப்பான 'மேன்மக்கள்' பொருத்தமாக அமையும், ஆகவே தங்களிடம் தலைப்பினை யாசிக்கிறேன்" எனக் கூறினேன், அய்யா அவர்களும், நகரத்தார்களின் சிறப்புகளைக் கூறி "நல்ல தலைப்பு தொடர்ந்து எழுதுங்கள்" என உற்சாகப்படுத்தினார். இதோ

தூக்கம் தொலைத்த இரவுகளில் நான் பெருமிதத்தோடு நம் இனத்தைப்பற்றி படைத்திட்ட நூறு கவிதைகள் 'மேன்மக்கள் நகரத்தார்' என்ற தலைப்பில் உங்கள் கரங்களில்...

5100 ஆண்டுகள் பழமைமிக்க ஒரு சிறுபான்மை சமுதாயம் நகரத்தார் சமுதாயம். உலகில் பல்துறை சாதனையாளர்களைப் பட்டியலிட்டால், இச் சமுதாய மக்கள் பெரிதின் இடம் பெறுவது திண்ணம்.

'உண்மை உழைப்பு உயர்வு நலம்
ஒருங்கே பெற்ற நகரத்தார்
சிறிய இனம்தான் என்றாலும்
சிறந்த சாதனை கொண்டஇனம்'

என்பதாக இன்று உலகத்தாரால் உற்றுநோக்கப்படும் இனம் நம் இனம்.

மகாகவி பாரதியார்,

'பல நூல்கள் பதிப்பித்தும், பல பெரியோர்
பிரசங்கம் பண்ணு வித்தும்
நலமுடைய கலாசாலை புத்தகசா லைபலவும்
நாட்டி யுந்தங்
குலமுயர நகருயர நாடுயர வுழைக்கின்றார்
கோடி மேன்மை'

என நகரத்தாரைப் போற்றிப் பாடல்கள் சமைத்திருப்பது சிறப்பு.

இத்தகைய பெருமை வாய்ந்த சமுதாயத்தின் சிறப்புகளை நம் இன்றைய இளைய தலைமுறையினர் அறியாமல் இருப்பதும், நம் மரபு சார்ந்த பழக்க வழக்கங்களை பின்பற்றாமல் இருப்பதும் வேதனை. அவர்களை மனதிலே வைத்தே எளிய தமிழில் இனிய நடையில் எதுகை, மோனை, இயைபோடு சந்தப் பாடல்களாகக் கவிதைகளை யாத்துள்ளேன்.

நமது ஆயாக்களும், அப்பத்தாக்களும் பேரப் பிள்ளைகளை மடியில் கிடத்தி, இந்நூலில் உள்ள ஒவ்வொரு பாடலினையும் எடுத்தாண்டு, மிகுந்த விளக்கம்தர வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல, பதமாக அமைந்த பாடல்களை எடுத்து இளைய சமுதாயத்திற்கு பந்தி வைத்து பரிமாறிட ஆச்சிகளையும், செட்டியார்களையும் அன்போடு அழைக்கின்றேன். அப்பொழுதுதான் இனப்பெருமை ஓங்கும். குலநலம் காக்கப்படும்.

நம் சமுதாயத்தில், மிகவும் போற்றத்தக்க ஒரு சிலரைத்தவிர்த்து சாதனை செய்த சான்றோர்களை நான் அதிகம் பாடவில்லை, தனிமனித சாதனைகளைப் பாடத் துவங்கினால் 105 கவிதைகள் என்பது 1000 ஐத் தாண்டும் சாதனையாளர்கள் விடுபட்டுப் போனாலும் மிகுந்த வருத்தம் தரும். அது ஒரு நீண்ட பயணம் இறையருளால் சாத்தியமாகும் என நம்புகிறேன்.

ஒரு குலத்தின் பெருமையை, இனத்தின் பெருமையைப் பாடலாமா? என்ற வினா ஒரு வேளை என்னை நோக்கி எழுப்பப்பட்டால், கவியரசு கண்ணதாசன் பாடல் வாயிலாகவே அவர்களுக்குப் பதில் சொல்ல விரும்புகிறேன்.

"ஒன்று சமுதாயம் என்று வரும் நாள் வரையும்
தத்தமது சாதியினைத் சாதியினர் போற்று மட்டும்
சபையில் முழக்கிடுவோர் சாதிக்கே வாழுமட்டும்
நாமும் நமது குலம் நலங்காணப் போரிடுவோம்
நகரத்தார் நல உலகை நாளைக்கே நாம் சமைப்போம்"

எப்படியும் வாழலாம் என் போர் மத்தியில் இப்படித்தான் வாழ வேண்டும் என இலக்கணம் வகுத்துக் கொண்டு இன்று வரை பிறழாமல் வாழும் குடி, நகரத்தார் குடி.

தப்பிதம் இன்றி வாழ்கின்ற
தகுதி மிக்க செட்டிகுலம்
ஒப்பில் லாத உயர்ந்தகுலம்
உலகில் உண்டோ சொல்லம்மா?

என வினா எழுப்பி, அவ்வினாவிற்கு விடையினை 100 பாடல்களில் எடுத்தியம்பியுள்ளேன்.

''தமிழ்', தமிழர் இனம் எனச் சொல்வது போல, அதில் ஓர் அங்கமான நகரத்தார் இனம் குறித்து பெருமை பொங்க பாடியுள்ளேன். குற்றம் குறையிருந்தால் மன்னிப்பீர்! பொருத்தருள்வீர். நிறைகளைச் சொல்லுங்கள், குறைகளையும் சுட்டிக் காட்டுங்கள், அடுத்த பதிப்பில் திருத்திக் கொள்கிறேன்.

பெருமைக்குரிய இனங்களிலே, பெருமை வாய்ந்த இனமான நம் நகரத்தார் இனம் பற்றிய இச்சிறுநூலை வாங்கி தங்கள் இல்லத் திருமண விழாக்களில் அன்பளிப்பாக வழங்கிட வேண்டுகிறேன்.

அழகிய நடையில் வாழ்த்துரை நல்கி, என்னை மிகவும் பெருமைப்படுத்திய நகரத்தார் சமுதாயத்தின் நடமாடும் பல்கலைக்கழகம் உச்சநீதிமன்ற மேனாள் நீதியரசர். டாக்டர். ஜஸ்டிஸ் ஏ.ஆர். லெட்சுமணன் அவர்களுக்கு என் சிரம்தாழ்ந்த நன்றிகள்!

இந்நூல் வெளிவர எனக்கு மிகுந்த ஊக்கமும், உற்சாகமும் நல்கிய அன்புத் தம்பி முனைவர். ஜெ. பிரகாஷ்மணிமாறன் அவர்களுக்கும், என் அருமை பங்காளி தம்பி அண. சீனிவாசன் அவர்களுக்கும் முதற்கண் என் நன்றி!

“பாருள்ளளவும் நின் பா நிற்கும் நிலைத்து...” என்று உயரிய நடையில் மதிப்புரை வழங்கிய என் அருமை இரணிக்கோயில் பங்காளி அண்ணன் மெ. அழகப்பன் அவர்களுக்கு மிக்க நன்றி!

"செட்டிப்பிள்ளை கெட்டிப்பிள்ளை" என்பதற்கிணங்க இளம் வயதிலேயே, புகழ்வானில் பூக்கும், என் அருமைத் தம்பி, அணிந்துரையை அற்புதமாக நல்கிய திருக்குறள் தேனீ, நல்லாசிரியர். கவிஞர். மெ. செயம்கொண்டான் அவர்களுக்கு நன்றி!

குறுகிய காலத்தில் அழகிய முறையில் அச்சிட்டு வழங்கிய பாரத் பிரிண்டர்ஸ் நண்பர் பா. அருணகிரி அவர்களுக்கும், நூலை வெளியிட்டு மீண்டும் என்னை கௌரவப்படுத்திய செந்நிலா பதிப்பக உரிமையாளர் பொறியாளர் எஸ். ஜெயச்சந்திரன் அவர்களுக்கும் நன்றி!

எழுத்துப்பிழை, சொற்பிழை கண்டு திருத்திய எனது அன்பு ஆசிரிய சகோதரர் வீர. முத்துப் பழநியப்பன் அவர்களுக்கும் நன்றி!

எனது வளர்ச்சிக்கெல்லாம் ஊற்றுக் கண்ணாய் இருக்கும் நகரத்தார் பள்ளி, நன்னலம் சேர்க்கும் நூற்றாண்டுப் பள்ளி, காரைக்குடி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் வித்யாசாலா மேல்நிலைப்பள்ளி நிர்வாகத்தாருக்கும், மேனாள் தலைமையாசிரியர் முரு. வள்ளியப்பன் அவர்களுக்கும், தலைமையாசிரியர் லெ. பழநியப்பன் அவர்களுக்கும் ஆசிரிய அலுவலக நண்பர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகள்!

'வாழிய நீடு! வல்லன்மை மிக்க நகரத்தார் சமுதாயம்!'

அன்புடன்...

சேவு. முத்துக்குமார்
494, அமுதகம், குறிஞ்சி வீதி,
சூடாமணிபுரம், காரைக்குடி – 03.
திறன்பேசி: 9443288931, 7339280720
மின்னஞ்சல்: **muthukumarsmsv@gmail.com**

## மேன்மக்கள் நகரத்தார் - கவிதை நூல்

## உள்ளடக்கம்


செட்டிநாடு நாட்டுக்கோட்டை நகரத்தார் ஊர்கள்
N
புதுக்கோட்டை
பனையப்பட்டி
நச்சாந்துபட்டி
செவ்வூர்
வலையபட்டி
பொன்புதுப்பட்டி
மேலைச்சிவபுரி
வேந்தன்பட்டி
ராங்கியம்
திருமயம்
மதுரையிலிருந்து
திருப்பத்தூர்
பட்டமங்கலம்
திருக்கோஷ்டியூர்
நாச்சியாபுரம்
மானகிரி
சொக்கநாதபுரம்
மதகுபட்டி
செம்பனூர்
கல்லல்
பாகனேரி
பனங்குடி
ஒக்கூர்
நடராசபுரம்
சோழபுரம்
காளையார்மங்கலம்
வேந்தூர்
சக்கந்தி
சிவகங்கை
காரைக்குடி
தேவகோட்டை
நகரத்தார் ஊர்கள்
நகரக் கோயில்கள்
பிற ஊர்கள்

# மேன்மக்கள் நகரத்தார்

## கவிதை நூல்

## 1. நகரத்தார் வரலாறு

### 1. செட்டி மக்கள்



செந்தமிழ் சிவனெறி செழித்துதோங்கும்
செட்டி மக்கள் மேன்மையினை
வந்தனை கூறி சொல்லவந்தேன்
வாழும் தலைமுறை அறிந்திடவே;
சிந்தனை மிக்க நகரத்தார்
செழித்து வளர்ந்த சிறப்பினையே
கந்தன் அருளால் பாடவந்தேன்
கற்பகப் பிள்ளை துணையிருப்பான்

### 2. நகரத்தார்

உ
சிவமயம்

உகரம் தொட்டுக் காரியத்தை
உன்னதம் கொண்டு துவங்கிநிதம்
சிகரம் தொட்டு உயர்ந்தார்கள்
செல்வம் ஓங்கித் திகழ்ந்தார்கள்
நகரம் காஞ்சி விட்டகன்று
நந்நகர் புகாரில் வாழ்ந்ததினால்
நகரத் தார்எனப் பலர் அழைக்கும்
நற்பெயர் பெற்றுச் சிறந்தார்கள்

### 3. மன்னருக்குப் பின்னோர்



மன்னர் குலமும் போற்றிடவே
மகிழ்சூழ் வணிகம் பலநடத்தி
தன்னோர் இல்லா மக்களெனத்
தகுதி பெற்ற நகரத்தார்
நன்னலம் வாய்க்கப் பெற்றார்கள்
நானிலம் போற்றி வணங்கிடவே
மன்ன ருக்குப் பின்னோராய்
மன்றில் அழைக்கப் பட்டார்கள்

## 4. நாட்டுக்கோட்டைச் செட்டியார்



மன்ன ருக்குப் பின்னோராய்
மதிப்புப்பெற்ற நகரத்தார்
மன்னர் வழியைப் பின்பற்றி
மதில்சூழ் கோட்டை போல்அமைத்து
திண்ணம் மிக்க வீடுகளைத்
திறம்படக் கட்டிய காரணத்தால்
நன்னயம் மிக்க நகரத்தார்
நாட்டுக் கோட்டைச் செட்டிஆனார்



## 5. மூத்த இனம்

நாக நாட்டைப் பூர்வீகமாய்
நாடி இலங்கிய நகரத்தார்
ஊகம் கொண்டு ஆய்ந்திட்டால்
ஐயா யிரத்து நூறாண்டு
பழமை மிக்கது செட்டியினம்
பண்பட் டொளிரும் பெருமைகுலம்
வளமை இன்றும் மாறாமல்
வாழும் உலகின் மூத்தஇனம்




## 6. சீர்பெற்ற சமுதாயம்

மரகத விநாயகர் பூஜைசெய்து
மங்கல ஈஸ்வரன் தரிசித்து
இரத்தின வாணிகம் செய்தோங்கி
ராஜ போகமாய் வாழ்ந்தார்கள்
தங்கக் கலசம் இல்லத்தின்
தலைமேல் ஜொலிக்கும் அதன்மேலே
சிங்கக் கொடியைப் பறக்கவிட்டு
சீர்பெற் றுயர்ந்த சமுதாயம்



## 7. ஆதிக்குடி



தொண்டை மண்டலம் காஞ்சிபுரம்
    தொடர்ந்து சோழ மண்டலத்தில்
உண்மை உழைப்பால் உயர்ந்தகுடி
    உலகில் இதுவே மூத்தகுடி
முன்னோர் காட்டிய நெறியினையே
    முனைந்து பற்றி வாழும்குடி
தொன்மை வளமை பெற்றகுடி
    தொன்தமிழ் மக்களில் ஆதிக்குடி

## 8. மூத்த குடி



அருளை வழங்கும் ஈசனுக்கே
    அம்மை அப்பனைத் தந்தகுடி
கருவாய் இருக்கும் குழந்தைக்கும்
    கலைபல ஊட்டும் மேன்மைக்குடி
வருவாய் வரும்வழி அறிந்ததனால்
    வாழும் தலைமுறை போற்றும்குடி
'தரு' வாய் உலகில் பலன்நல்கும்
    தன்னல மில்லா மூத்தகுடி!

## 9. தனவைசியர்



வங்கப் பெருங்கடல் வழியறிந்து
    வாணிகம் செய்தார் அயல்நாட்டில்
சிங்கை மலேயா வியட்நாமில்
    சிறப்புடன் வாழ்ந்து சிறந்திட்டார்
ரங்கூன் பர்மா இலங்கையிலும்
    ரத்தின வணிகம் செய்வித்தார்
எங்கும் நிறைந்தார் இறையருளால்
    இயன்றதைச் செய்தார் இல்லார்க்கே!

# உ. முன்னோர் பெருமை

## 10. நாயன்மார்களில் ஐவர்



செயற்கரும் செயல்கள் செய்வித்த
சீர்மிகு நாயன் மார்தம்மில்
இயற்பகை நாயனார் இக்குலமே
இறைவன் அடியைத் தொழுதிட்ட
நயத்தகு மூர்த்தி நாயனாரும்
நல்கலி கம்பர் அமர்நீதி
வியத்தகு காரைக் காலம்மை
விளங்குநல் ஐவரும் நம்குலமே.

## 11. காரைக்காலம்மை



அத்தான் விரும்பா காரணத்தால்
அழகு வேண்டாம் எனச்சொல்லி
பித்தன் சிவனால் பேயுருவம்
பெற்றாள் காரைக் காலம்மை
சித்தம் சிவனின் மேல்வைத்து
சிரசை பாதம் ஆக்கியவள்
கத்தும் கடல்சூழ் இறையடியை
கதியாய்ப் பற்றிச் சிறந்தனளே!

## 12. கண்ணகி



தவறு செய்தான் மன்னனென்று
தனியொ ருவளாய்ச் சிலம்பேந்தி
எவரும் காணா உருவேற்று
எழில்நிறை அரண்மனை போய்நின்று
கவர்ந்த சிலம்பைக் கேட்டுடைத்து
கணவனின் களங்கம் துடைத்தவளாம்
தவமாய்த் தோன்றிய கண்ணகியைத்
தலைம களாகப் பெற்றகுலம்.

### 13. பட்டினத்தார்



அன்பே உருவாய் ஆனவராம்
அறிவிற் சிறந்த பட்டினத்தார்
தன்வினை தன்னைச் சுடுமென்று
தத்துவம் சொல்லித் துறவேற்றார்
அன்னை மறைவு கேட்டவுடன்
அழுது புலம்பி கடனாற்றி
நன்னயம் செய்தார் நலம் பெற்றார்
நகரத் தார்குலம் பெருமைஉற.

### 14. பாடுவார் முத்தப்பர்



செய்தொழி லாலே சிறப்புபெறும்
செட்டி மக்கள் மேன்மைஉற
தெய்வத் திருவருள் வேண்டியவர்
தெவிட்டாப் பனுவல் பாடியவர்
உய்ய மந்திரப் புலமைகொண்டு
உவந்து பாடுவார் முத்தப்பர்
அய்யன் மொழியால் இன்றளவும்
அருமைக் குலமும் தழைக்கிறதே!



## 3. அறப்பணி



**15.** மானம் ஒன்றே பெரிதென்று
மதித்து வாழும் நகரத்தார்
தானம் தர்மம் செய்வித்தே
தன்னல மின்றிச் சிறப்பவர்கள்
ஊனம் மனதில் இல்லாமல்
உலகில் நன்மை செய்பவர்கள்
தேனாய் இனிக்கும் பேச்சாலே
தெள்ளு தமிழைக் காப்பவர்கள்



**16.** சிற்றூர் வாழும் மக்களுமே
சிறந்திட சாலை அமைத்திடுவர்
நற்பலன் நல்கும் மரங்களையும்
நாற்புறம் நட்டுக் காத்திடுவர்
பற்பலர் பயனுற சுமைதாங்கிக்
கற்களை நடுவர் இளைப்பாற
நற்பய னாக நீர்ப்பந்தல்
நல்கித் தாகம் தீர்த்திடுவர்



**17.** மருத்துவ மனைகளை ஊர்தோறும்
மகிழ்வாய்க் கட்டி நலம் சேர்ப்பர்
பெருநலம் போற்றப் பள்ளிகளைப்
பெரிதாய்க் கட்டிப் புகழ் பூப்பர்
திருவிழா நிகழும் போதெல்லாம்
திரளும் மக்கள் பசியாற
வருவாய் தன்னில் சத்திரங்கள்
வகையாய்க் கட்டிப் பசிதீர்ப்பர்!



## 4. ஆலயப்பணி



**18.** ஆலயப் பணியே அறப்பணியாம்
அன்பே தாரக மந்திரமாம்
காலமும் நேரமும் போற்றித்திசை
காட்டும் கருவியாய் வாழ்பவர்கள்
வானை அளக்கும் கட்டடங்கள்
வளன்மனை போல அமைத்தவர்கள்
சேனைப் படையிலா மன்னனாகச்
சிறப்புடன் உலகில் திகழ்பவர்கள்



## 19. ஊர்கள் 96

96 ஊர்கள்

நாட்டுக் கோட்டை நகரத்தார்
நலம்பல பெறவே மன்னனிடம்
கேட்டுப் பெற்ற நல்லூர்கள்
தொண்ணூற் றாறின் அடிப்படையில்
நாட்டிய கோயில் ஒன்பதுவாம்
நலமாய் சைவ நெறிஎன்றும்
காட்டிய பாதையில் வாழ்பவர்கள்
கருணைக் கடலாய்ச் சிறப்பவர்கள்






## 20. நாட்டிய கோயில் ஒன்பது

இளையாத் தங்குடி எழிற்கோயில்
ஏழ்நிலை மாடம் மாத்தூராம்;
நலம்சேர் வைரவன் கோயிலுடன்
நற்புகழ் சேர்க்கும் நேமம்தான்
வளம்தரு இலுப்பக் குடிக்கோயில்
வண்ணம் சேர்க்கும் சூரக்குடி
உளநலம் தருமே வேலங்குடி
உன்னதம் இரணிக் கோயிலுடன்



**21.** நற்புகழ் பிள்ளை யார்பட்டி
நாட்டிய கோயில் ஒன்பதுவாம்
கற்பக விநாயகர் அடிதொழுது
கணக்காய் காரியம் தொடங்கிடுவர்
சிற்றூர் பேரூர் நிறைந்துநின்று
சிறப்பாய்க் கோயில் சமைத்திடுவர்
உற்றார் உறவினர் அழைத்துவந்து
ஊரே மகிழ விழாஎடுப்பர்!





**22.** செந்தூர் நின்று அருள்வழங்கும்
    செட்டி முருகன் துணையாலே
வந்த அயலக தேசமெங்கும்
    வாணிகம் செய்தே பொருளீட்டி
சிந்தை நிறைந்த கடவுளுக்குச்
    சிறப்பாய்க் கோயில் பலஎழுப்பி
இந்து மதத்தை உலகெங்கும்
    ஏற்றம் பெறவே செய்தவர்கள்



**23.** கோயில் கூரையில் விரிசல்வரின்
    கூப்பிடு வார்கள் செட்டியாரை
கோயில் கட்டியும் புதுப்பித்தும்
    குளங்கள் வெட்டிப் பாடசாலை
ஆயிரம் ஆயிரம் கட்டியுமே
    அத்தனை இடத்திலும் பசுமடங்கள்
தாயுளம் கொண்டே கட்டுவித்து
    தன்னலம் இன்றி வாழ்பவர்கள்



## 5. கல்விப்பணி

**24.**பொருளைப் போற்றி வாழும்முறை
    புவியோ ருக்குச் சொன்னகுடி
கருணை கொண்டு கல்விக்காய்
    கடல்போல் பரந்த மனங்கொண்டு
திருநிறை தந்து செகம்புகழ
    திசைகள் எட்டும் பாடசாலை
வரும்படி தன்னில் எழுப்பிபிறர்
    வாழ வழிதனைச் செய்தகுடி.



**25.** கல்விச் சாலை அமைத்துபலர்
    கண்ணைத் திறந்த மேன்மைக்குடி
பள்ளிகள் துவங்கிக் கல்லூரி
    பற்பல படைத்த நல்லகுடி
பல்கலைக் கழகம் நிறுவிநிதம்
    பல்துறை வல்லுநர் உருவாக்கி
நல்வித மாகவே நாட்டுநலன்
    நாளும் காக்கும் உயர்ந்தகுடி.





**26.** அள்ளக் குறையா கல்வியினை
    அகிலம் போற்றத் தந்திட்ட
கல்வித் தந்தை அழகப்பர்
    கலைகளின் தந்தை கருமுத்து
வள்ளல் அண்ணா மலையரசர்
    வாரித் தந்தனர் இவர்களைப் போல்
கல்விக் கோயில் சமைத்தவர்கள்
    கணக்கில் அடங்கார் நம்குலத்தில்





## 6. சைவப்பணி

**27. சமரச ஞானம்**

சைவ ராக இருந்திடினும்
    சமரச ஞானம் உடையவர்கள்
சிவனை வழிபடும் வேளையிலும்
    திருமால் வணக்கம் செய்திடுவர்
தவமே செய்ய வேண்டுமம்மா
    தகுதி மிக்க இக்குலத்தில்
நவமாய்ப் பிறந்து வளம்காத்து
    நல்லோர் வாழ்த்தைப் பெறுவதற்கே!





## 28. விழாக்கள்

சித்திரை மாதம் நடைப்பயணம்
சிறக்கும் வைத்தீஸ்வரன் கோவில்
நித்திரை துறந்து சென்றிடுவர்
செந்தூர் முருகனைக் காண்பதற்கு
பத்து நாட்கள் ஆடியிலே
பட்டி னத்தார் திருவிழாவும்
கத்தும் கடல்சூழ் பூம்புகாரில்
கலைபல மேவி அழகூட்டும்.



## 29. தைப்பூசம்



குன்று இருக்கும் இடமெல்லாம்
குமரன் இருப்பான் எனச்சொல்லி
நன்றாய் முருகனை நற்துணையாய்
நன்னெறி யாகப் பற்றிடுவர்
என்றும் எங்கும் விழாஎடுப்பர்
எழில்தைப் பூசம் கந்தசஷ்டி
அன்பாய் விரதம் மேற்கொள்வர்
அழகுக் காவடி எடுத்திடுவர்.



**30.** வெப்பு மிகுந்த தைமாதம்
வேலனைப் பாடி நன்றி சொல்ல
அப்பன் பழநி மலைநோக்கி
அலை அலை யாகச் சென்றிடுவர்
உப்பு வாணிகம் செய்வித்தே
உயர்ந்த செட்டி மக்களுமே
ஒப்புக் கொண்டு காவடிகள்
எடுத்து ஆடி நலம்சேர்ப்பர்



## 7. இலக்கியப் பணி / கலைப்பணி

### 31. ஐந்தில் மூன்று

செந்தமிழ் நாட்டுக் காப்பியங்கள்
சிலம்பு வளையா பதியினையும்
வந்தனைக் குரிய மேகலையும்
வடித்துத் தந்த மேன்மைக்குடி
பைந்தமிழ் பாக்கள் இயற்றுவித்த
பாவலர் பலரை உலகினுக்கு
நந்தமிழ் சிறக்க தந்தகுடி
நானிலம் போற்றும் நமதுகுடி



### 32. கலைத்துறைத் தந்தை

திரைஉல கின்று மேன்மையுற
திறம்பட அடித்தளம் அமைத்துப் பலர்
நலம்பெறக் கலைகளை வளர்த்தவராம்
நாடு போற்றும் மெய்யப்பர்
வளம்நிறை ஏ.வி.எம் நிறுவனத்தால்
வண்ணப் படங்களை ஆக்கியவர்
கலைத் துறைத் தந்தை அவர்வழியில்
கணக்கில் அடங்கார் நம்குலத்தார்



### 33. கவிப்பேரரசர்

நாட்டுக்கோட்டை மரபினிலே
நல்மக னாகத் தோன்றியவர்
பாட்டுக் கோட்டை யாய்யுயர்ந்த
பாவலர் நற்கவி கண்ணதாசன்
அரசியல் இலக்கியம் திரையுலகம்
அத்தனை துறையிலும் தடம்பதித்து
அரசவைக் கவிஞராய்ச் சிறப்புற்றார்
அகிலம் போற்றும் கவியரசாய்



## 8. தமிழ்ப்பணி



**34.** தமிழும் சைவமும் தழைத்தோங்கத்
    தம்மால் ஆன முயற்சிகளை
அமிழ்தம் அனைய ஊட்டுவிக்கும்
    அருமைப் பெரியோர் நிறைந்தகுலம்
கம்பன் விழாவும் கந்தசஷ்டி
    கவின்மிகு விழாவும் பட்டினத்தார்
மண்பதை உலகில் சிறந்தமையை
    மகிழ்விழா வாக எடுக்கும்குலம்.



**35.** தமிழ்மொழி தரணியில் ஓங்கிடவே
    தன்னால் ஆன முயற்சிகளை
இமிழ்கடல் கடந்தும் வளர்க்கின்றார்
    இவர்களுக் கிணையே இவரேதாம்
தமிழிசை சிறக்க எந்நாளும்
    தரணியில் அமைத்தார் இசைமன்றம்
அமிழ்தத் தமிழில் சங்கங்கள்
    ஆக்கிச் சமைத்துச் சிறக்கின்றார்



## 9. தொழில் வளம்




### 36. இவர்போல் யாருளர்

காரைக் குடியைத் தலைநகராய்க்
    கொண்டு இயங்கும் நகரத்தார்
பாரில் பரந்து சிறக்கின்றார்;
    பண்படு தொழில்பல செய்கின்றார்;
தேரில் உலாவரும் இறைவனைப்போல்
    திசைகள் எட்டும் சிறக்கின்றார்;
ஊரில் இவர்போல் யாருளரோ?!
    ஊரார் எல்லாம் வியக்கின்றார்!!






### 37. முதன்மைத் தொழில்



வட்டித் தொழிலும் வணிகமுடன்
    வளமை நல்கும் ஆலைத்தொழில்
செட்டி மக்கள் ஈடுபடும்
    சிறந்த முதன்மைத் தொழிலாகும்
திட்ட மிட்டு செயல்புரிந்து
    திடமாய் வளர்ப்பார் தகுதியினை
கொட்டும் செல்வம் அதனாலே
    குவியும் பொன்னும் மலைபோலே!



### 38. செட்டிப்பிள்ளைக்கு ஈடுண்டோ!

வட்டித் தொழிலில் நேர்மையினை
    வகையாய்க் காட்டி பொருள்சேர்ப்பர்
செட்டிமகனாம் முருகனுக்கு
    திசைகள் எட்டும் கோயில்கள்
கட்டி, கடல்போல் பொருளீட்டி
    கணக்காய்ச் செலவு செய்பவர்கள்
எட்டு பிள்ளை பெற்றாலும்
    செட்டிப் பிள்ளைக் கீடுண்டோ!



8 = 1

## 10. தோற்றப் பொலிவு

### 39. ஆச்சி



தங்கக் காப்பும் மோதிரமும்
    தாலிச் சங்கிலி மாட்டலென
அங்கம் ஜொலிக்கும் டோலக்கு
    அழகைக் கூட்டும் ஆச்சிக்கு
மங்கல நாளில் அணிவதற்கு
    மனது விரும்பும் அணிகலன்கள்
தங்கள் அழகைக் கூட்டிடவே
    தகுதி கொண்டே அணிவார்கள்

**40. செட்டியார்**



அணிமணி கழுத்தில் சங்கிலியும்
அணிந்தே கைச்செயின் காப்புடனே
நனிதிகழ் வைர மோதிரமும்
நவரத் தினமும் தகதகக்க
பிணிகளைப் போக்கும் உருத்திராட்சம்
பிரியம் கொண்டே அணிகின்ற
கனிவு மிக்கச் செட்டியார்கள்
கணக்கில் அடங்கார் நம்குலத்தில்

## 11. கட்டடக்கலை

**41.வாழும் மனை**



ஏட்டில் எழுத வொண்ணாத
எழில்வடி வாக வீடமைக்கும்
நாட்டுக் கோட்டைச் செட்டியார்போல்
நாட்டில் வாழ்வோர் உண்டோசொல்
வீட்டை நான்கு பாகமாக்கி
வியக்கக் கட்டும் நகரத்தார்
நாட்டம் கொண்டே கலைப் பொருட்கள்
நாடு விட்டே கொணர்ந்திடுவர்



**42.** பர்மா தேக்கு தூணாகும்
பெல்ஜியம் கண்ணாடி பளபளக்கும்
மர்மம் நிறைந்த குகைபோலே
மாடங்கள் நீண்டு சிறந்திருக்கும்
வாசல் இருபுறம் திண்ணைகளும்
வாவென் றழைத்து அமரவைக்கும்
பேச ஆட குழந்தைகட்கு
பெரிதாய் முகப்பு அமைந்திருக்கும்



**43.** முகப்பை கடந்து வளவிருக்கும்
வளவில் அறைகள் மிகுந்திருக்கும்
முகந்து கடலில் மேகம்தரும்
மழைநீர் சேர்க்க வாசலுண்டு
தரமாய் ஆத்தங் குடிபூக்கல்
தரையில் பதிந்து மினுமினுக்கும்
மரத்தால் ஆன கதவுகளோ
மதியை மயக்கும் சிற்பங்களால்





**44.** வீடு முழுதும் ஜன்னல்கள்
வெளிச்சம் பரவிடத் துணைநிற்கும்
நாடி உண்ணும் அறைநீண்டு
நலமாய் நமது பசிபோக்கும்
மாடி முழுதும் அறைகளாகி
மலைபோல் பொருட்களைச் சேகரிக்கும்
தேடிச் சென்றால் சமையலறை
சிறப்பாய் மூன்றாம் கட்டில்வரும்



**45.** அடுப்படி அடுத்து தோட்டம் வரும்
அங்கே மாபலா வாழையுடன்
புடலை அவரை வெண்டையுமே
பயன்தரு முருங்கை கத்தரியும்
கனகாம் பரமும் செம்பருத்தி
காற்றில் ஆடும் தென்னையுமே
அணிஅணி யாகக் காட்சிதரும்
அகண்ட கிணறோ நீர்நல்கும்





**46.** கழிவு நீரும் மழைநீரும்
கடந்து செல்லத் தூம்புஉண்டு
வளவு வாசலில் பத்தி ஓரம்
பட்டியக் கல்லும் பதிக்கப்படும்
வளவைத் தாங்கும் மரத்தூணும்
வண்ணம் நிறைக்கும் சிற்பங்களால்
நலமே விளையும் நகரத்தார்
நற்பண் பாட்டில் சிகரத்தார்



## 12. உறவுப் பெயர்கள்



**47.** பெண்களைப் 'பெண்டுகள்' என அழைத்து
பெருமை உற்ற சமுதாயம்
முன்னோர் வழியைப் பின்பற்றி
முறைப்பெயர் சொல்லி அழைத்திடுமே!
அன்புத் தந்தையோ 'அப்பச்சி'
அருமைத் தாயோ 'ஆத்தா'ளாம்
பண்பில் சிறந்த அக்காளை
பாசம் நிறைய 'ஆச்சி'யென்பர்



**48.** அண்ணன் மனைவி 'அண்ணமுண்டி'
அத்தை மகனோ 'அய்த்தானாம்'
அன்பாய் பேசும் அத்தைமகள்
'அய்த்தி யாண்டி' ஆயிடுவார்
தன்னலம் கருதா மனையாளின்
தமையன் 'மைத்துனன்' ஆயிடுவான்
நன்றே கணவனின் உடன்பிறந்தார்
'நாத்தனார்' கொழுதுனார் ஆயிடுவார்



**49.** தந்தை தாயின் அப்பச்சி
'அய்யா' ஆவார் அனைவருக்கும்
தந்தை தந்தவள் 'அப்பத்தாள்'
தாயின் தாயோ 'ஆயாளாம்'
அருமை மாமன் 'அம்மானாம்'
'அம்மா முண்டி' அவர்மனைவி
பெருமை மிக்க பெயர்களையே
பெற்று உயர்ந்த சமுதாயம்





**50. சொல்வழக்கு**

திட்டும் போதும் உயர்வாக
குல நலம் காப்பர் ஆச்சிகளும்
'பட்டுக் கிடப்பான்' என்பார்கள்
'பட்டில் படுப்பான்' என்பதாகும்
குண்டாய் இருப்பாள் 'குந்தாணி'
கோபப் படுபவன் 'வெளம்புடுங்கி'
என்றும் கஞ்சன் சொல்வழக்கில்
'கசமாய்' ஆவான் நம்குலத்தில்



## 13. செட்டிநாட்டுப் பலகாரம்

**51. ஆச்சியின் கைவண்ணம்**

சீப்புச் சீடை எள்ளடையும்
திரட்டுப் பாலுடன் கவணரசி
ஆப்பம் அவியல் அடையுடனே
அழகாய் வெள்ளைப் பணியாரம்
நாக்கில் ஊறும் குலோப்ஜாமூன்
நலம்பல சேர்க்கும் இடியாப்பம்
ஊக்கம் தரும்நல் கந்தரப்பம்
உண்டோ உலகில் வேறெங்கும்.





**52.** தேங்குழல் அதிரசம் மணகோலம்
தெவிட்டா உக்காரு கும்மாயம்
பாங்குடன் ஆச்சி சுட்டெடுக்கும்
பச்சை முறுக்கு கைமுறுக்கு
வட்டியில் ஊறும் கொழுக்கட்டை
வகைவகை யாக மாவுருண்டை
செட்டி நாட்டுப் பலகாரம்
சிறக்கும் மணக்கும் உலகெங்கும்.





**53. வற்றல் / வடகம்**

சித்திரை வெயிலில் காயவைத்து
சிறக்கும் மணக்கும் உப்புக்கண்டம்
கத்தரி சுண்டை வற்றலுடன்
கமகம வெங்காயக் கரிவடகம்
கொத்த வரங்காய் கிள்ளுவற்றல்
கொடிஅவ ரைக்காய் மிதுக்கவற்றல்
நித்திரை துறந்து ஆச்சிகளும்
நிறைவாய்ச் செய்ய வாயூறும்



**54. செட்டி நாட்டு விருந்து**

உப்பு அப்பளம் வறுவல்வடை
உன்னதம் கூட்டு மசியலுமாய்
துவட்டல் மண்டி பொறியலுடன்
துணைச்சா தமெனப் பிரியாணி
பருப்புடன் நெய்சூப் சாம்பாரும்
பயக்கும் கார இளங்குழம்பு
இருக்கும் ரசம் தயிர் பாயாசம்
இலையை நிறைக்கும் இடவலமாய்.



# 14. இறைவழிபாடு

## 55.படைப்பு



ஈண்டு நற்குலம் தழைத்திடவே
இறையாய் அனைய முன்னோர்க்கு
வேண்டிய பேழையில் துணிமணிகள்
விரும்பும் கருப்பட்டு பணியாரம்
நன்மனை வைத்து வழிபட்டு
நலத்தைக் காத்திட வேண்டிடுவர்
ஆண்டுக் கொருமுறை படையலிட்டு
அருமைக் குலத்தைக் காத்திடுவர்.



## 56.



அக்கினி ஆத்தாள் மெய்யாத்தாள்
அழகன் செட்டி கருப்பையா
எக்கணம் காக்கும் ஆண்டாத்தாள்
எழில்நல வளத்தம்மை அடைக்காத்தாள்
இக்கணம் வருவாய் எனச் சொல்லி
இயைந்து மாசி படையலிட்டு
அத்தனை பேரும் ஒன்றிணைந்து
அழகாய் நற்குலம் காத்திடுவர்

## 57. பிள்ளையார் நோன்பு



பெருமை மிக்க விழாக்களிலே
பிள்ளை யார்நோன்(பு) ஒன்றாகும்
அருமை திருக்கார்த் திகை முடிந்து
இருபத் தொன்றாம் நாளினிலே
மாவில் பிள்ளை யார்பிடித்து
மகிழ்சுடர் விளக்காய் ஏற்றியபின்
நாவில் படாமல் உள்ளனுப்பி
நற்குலம் தழைக்க வேண்டிடுவர்.



## 58. பொங்கல் பணம்

தஞ்சம் எனத்தன் மணவாளன்
    தலைமுறை காக்கும் பெண்ணுக்கு
மஞ்சள் கரும்பு அரிசிவெல்லம்
    மணக்கும் நெய்யுடன் காய்கறிகள்
பொங்கல் பணமும் தாய்வீட்டார்
    பொன்மகள் வம்சம் தழைத்தோங்க
மங்கல நாளில் தந்திடுவர்
    மகிழ்ச்சிப் பொங்கல் பொங்கிடவே!



## 59. இராமாயணம் படித்தல்

நற்புகழ் இராமன் கதையினையே
    நலம்பெற வேண்டி இல்லத்தில்
உற்றார் உறவினர் சூழ்ந்திருக்க
    உரக்கப் படித்து உய்த்துணர்வர்
ஏடு படிக்கும் நல்நிகழ்வு
    எழில் புரட் டாசி மாதத்தில்
வீட்டிலும் பொதுவிலும் நடத்திடுமே
    விரிந்து பரவும் ஒற்றுமையே.



## 60. மகர் நோன்பு

வில்லும் அம்பும் கையேந்தி
    வியன்நகர் வீதியில் வலம்வந்து
அள்ளக் குறையா அருள்நல்கி
    அம்பாள் விடுவாள் மகர் நோன்பில்
வெள்ளியில் ஆன கிலிக்கிகொண்டு
    விளங்கும் வாழை மரத்தினிலே
பிள்ளை கையால் அம்புகுத்தி
    பெருங்குலம் காக்கும் சமுதாயம்





## 61. விரதம்

மனமும் உடலும் வலிமைபெற
    மனம்நிறை கடவுளை வழிபட்டு
தனமும் தகுதியும் வளர்க்கின்ற
    தன்னல மற்ற ஆச்சிமார்கள்
கனிவு கொண்டு எடுக்கின்ற
    கணக்கில் அடங்கா விரதங்கள்
இனத்தின் பெருமை காத்திடுமே!
    இல்லறம் சிறக்கும் அதனாலே



## 62. சதுர்த்தி விரதம்

ஞால முதல்வன் விநாயகனின்
    ஞானம் பெறவே ஆச்சிகளும்
வேழ முகத்தான் அடிதொழுது
    விரதம் சதுர்த்தி கடைபிடிப்பர்
ஆண்டு முழுதும் சதுர்த்தியன்று
    முற்பகல் உண்ணா நோன்பிருப்பர்
வேண்டும் வரத்தைப் பெறுவதற்கு
    விரும்பி கொழுக்கட்(டை) படைத்திடுவர்



**63.** அன்று மதியம் அதையுண்டு
    அந்நாள் இரவில் பால்பழமும்
நன்றே உண்டு விரதத்தை
    நலமாய்த் தொடர்வர் ஓராண்டு
வருடம் ஒன்று ஆனதன்பின்
    வருவர் பிள்ளை யார்பட்டி
பெறுவர் அருளை சதுர்த்தியன்று
    பெருமைக் குலமும் ஓங்கிடவே!



# 15. சிறப்பு நிகழ்ச்சிகள்

## 64. தீர்த்தம் குடித்தல் / பிள்ளைப் பெறக் கூட்டல்



பெண்ணும் கருவுற்ற போதினிலே
பெருமை கொள்வர் பெண்வீட்டார்
நண்ணும் ஐந்தாம் மாதத்தில்
நலம்பெற தீர்த்தம் கொடுத்திடுவர்
நன்றாய்க் கருவும் வளர்ந்ததன்பின்
நன்னாள் பிள்ளை பெறக்கூட்டல்
ஒன்பதாம் மாதம் நிகழ்ந்திடுமே!
உறவினர் அழைத்து விருந்து வைப்பர்

## 65. மிட்டாய் தட்டு வைத்தல்



பிள்ளை பிறந்த செய்தியினைப்
பெருமை பொங்கச் சொல்லிடுவர்
இல்லம் வரவே அழைத்திடுவர்
இனிதாய் வருவர் உறவினர்கள்
உள்ளம் மகிழ உவந்தளிப்பர்
ரொட்டி மிட்டாய்க் குளிர்பானம்
வெள்ளித் தட்டில் அணிஅணியாய்
அள்ளித் தந்து அகமகிழ்வர்.

## 66. அப்பத்தாள் வீட்டார் வருகை



அருங்குலம் தழைக்கச் செய்திட்ட
அழகிய மகவை காண்பதற்கே
பெருமை உற்று ஆண்வீட்டார்
பெருந்திரளாக வருவார்கள்
விருந்து நடக்கும் தடபுடலாய்
விரும்பி அணிகலன் குழந்தைக்கும்
மருமகள் தனக்கும் அணிவிப்பர்
மணமகிழ் வோடு இருவீட்டார்.



## 67. காது குத்தல் / பெயர் வைத்தல்

குலத்தைக் காக்கும் தெய்வத்தின்
கோயில் சென்று வணங்கியபின்
நலமாய் இருபத் தொன்றாம்நாள்
நல்லணி கொண்டு காதுகுத்தி
வளமாய் நன்னாள் முப்பதிலே
வளமனை சிறக்கச் செய்திட்ட
இளநகைப் பிள்ளைக்குப் பெயர்சூட்டல்
இனிதாய் நடக்கும் நற்சடங்காய்



## 68. முடியிறக்கித் தொட்டில் கட்டல்

முதல்முடி எடுக்கும் நல்நிகழ்வு
முதலாம் மாதம் முடிந்த தன்பின்
இதந்தரு தெய்வக் கோயிலிலே
இனிதாய் நடக்கும் அறிவோமே
மேள தாளம் கேட்டங்கே
மெத்தச் சிரிக்கும் பிள்ளைக்கு
நீளக் கரும்பினில் தொட்டில்கட்டி
நீண்டபி ரகாரம் சுற்றிடுவர்



## 69. விளையாட்டுப் பெட்டி / புதுமை/கிலுக்கியெடுப்பு/ கொப்பி கொட்டல்



விளையாட்டுப் பெட்டி வேவிறக்கி
விருந்து வைத்து மகிழ்ந்திடுவர்
தலைச்சன் பிள்ளைக்கு ஆண்டொன்றில்
புதுமை என்ற விழாவெடுப்பர்
விளையும் பயிராம் மகனுக்கு
கிலுக்கி எடுப்பர் மகர்நோன்பில்
கலைபல கற்க மகளுக்கு
கொப்பி கொட்டுவர் தைமாதம்



## 70. சடங்கு



கார்த்திகை திங்கள் ஆண்பிள்ளைக் (கு)
கார்த்திகை புதுமை நடத்திடுவர்
மார்கழி மாதம் பெண்பிள்ளைக் (கு)
மகிழ்திரு வாதிரை விழாவெடுப்பர்
வயதுக்கு வந்த பெண்பிள்ளை (யை)
வண்ண மயமாய் அலங்கரித்து
மயங்கும் படிநல் சடங்குவிழா
மனமகிழ் வோடு எடுத்திடுவர்!



## 71. காய்ச்சூற்றல்

திருமண அகவை அடைந்தவுடன்
திருமணம் பேசி முடித்திடுவர்
இருமனம் இணையும் நல்விழாவை
இல்லறம் சிறக்க நடத்திடுவர்
மணமகன் ஆயாள் வீட்டினிலும்
மணமகள் ஆயாள் வீட்டினிலும்
இனநலம் தழைக்க காய்ச்சூற்றல்
இனிதாய் நடந்து நிறைவேறும்.



## 72. செவ்வாய்த் திருவிழா / வேறு வைத்தல்

திருமணம் நிகழ்ந்து வருகின்ற
தேர்த்திரு விழாவெனும் செவ்வாய்க்கு
மருமகன் மகளைச் சம்பந்தியை
மகிழ்ந்து அழைத்து விருந்திடுவர்
தருவர் தேங்காய் பழம்பணமும்
தழைக்க சந்ததி வேண்டிடுவர்
இருமனம் ஒருமனம் ஆயிடவே
இனிதாய் நடக்கும் வேறுவைத்தல்



### 73. தலைதீபாவளி / பொங்கல் சீர்



தங்கும் இன்பம் பெண்வீட்டில்
தலைதீ பாவளிக் கொண்டாட்டம்
எங்கும் நிறையும் மகிழ்ச்சிவெள்ளம்
எழில்மாப் பிள்ளை வருகையிலே
மங்கல நாளில் பெண்வீட்டார்
மனமகிழ் வோடு வருகைதந்து
பொங்கல் பானை சிறப்புச்சீர்
பொன்மகள் மலர வழங்கிடுவர்.



## 16. திருமண நடைமுறைகள்

### 74. திருமண மாலை



முன்னோர் வழியில் மாறாது
முயன்று பற்றி வாழ்கின்ற
ஒன்பது கோயில் நகரத்தார்
ஒன்றுகூடி முடிவெடுத்து
நன்றே கோயில் மாலையினை
நலமே பெறவே தருவித்து
அன்பாய்த் திருமணம் முடிக்கின்றார்
அருமைச் சமூகம் தழைத்திடவே

### 75. கழுத்துரு



நகரத் தாரின் திருமணத்தில்
நல்லணி யாகத் திகழ்ந்தோங்கிச்
சிகரத் தாராய் உயர்த்திடுமே
சீரணி கழுத்துரு அணிகலனே
ஒருவன் ஒருத்தி இணைகின்ற
ஒளிமய மான வாழ்க்கையிலே
சிறப்ப ணியாகத் திகழ்ந்திடுமே
சீலத்தில் இதற்கு இணையுண்டோ..?

### 76. முகூர்த்தக்கால்



பெண்ணும் பிடித்துப் போய்விட்டால்
    பேசி முடிக்க முனைந்திடுவர்
நன்னாள் குறித்து மணம்வைப்பர்
    நல்லணி கழுத்துரு பொன்கொடுப்பர்
முன்னோர் அழைத்து வளவினிலே
    முகூர்த்தக் காலை ஊன்றிடுவர்
ஒன்பது கோயிலில் தனக்கேதான்
    உரிய கோயிலில் பாக்குவைப்பர்

### 77. திருமணம் சொல்லுதல்





அருமை ஆயா இல்லத்தில்
    அன்புடன் திருமணம் சொல்லிடுவர்
பெரிய வீடும் சடங்குசெயும்
    பெருமை மிக்க மாமனுக்கும்
உரிய முறையில் திருமணத்தை
    உவந்து சொல்லி அழைத்திடுவர்
அரிய உறவினர் நண்பர்களை
    அழைத்து மகிழ்வர் விழாவிற்கே

### 78. அரசாணிக்கால்





மணநாள் முதல்நாள் மனையிடுவர்
    அரசா ணிக்கால் கட்டிடுவர்
இனத்து ஆச்சிகள் கோலமிட
    மிஞ்சி இடுவர் மாப்பிள்ளைக்கு
தும்பு பிடித்தல் சடங்குடனே
    துடிப்பாய் மாற்றுக் கட்டிடுவர்
நம்பியின் இதய நங்கைக்கு
    நலமாய்ப் பூரம் கழித்திடுவர்!



**79. மாப்பிள்ளை அழைப்பு**

அழைத்து வருவர் மணமகனை
    ஆரத்தி எடுத்து வரவேற்பர்
தழைத்துக் குலமும் ஓங்கிடவே
    இசைபிடிமானம் எழுதிடுவர்
உழைத்துச் சிறக்கும் மாமன்மார்
    உள்ளன் போடு வேவெடுப்பர்
மலைத்து நிற்கும் மக்களிடை
    மணவறைச் சடங்கும் நடத்திடுவர்





**80. சிறப்பு அணிகள்**

மங்கல அணியாம் கழுத்திருநல்
    மணமகள் கழுத்தை அலங்கரிக்கும்
தங்கச் சங்கிலி ரெட்டைவடம்
    தாலி இணைந்து மெருகூட்டும்
திங்களை நிகர்த்த மணமகளின்
    திருக்கழுத் தில்நல் பூச்சரமும்
மங்களச் சரமும் கண்டசரம்
    மணவிழாத் தகுதியை உயர்த்திநிற்கும்!





**81. திருப்பூட்டுதல்**

காப்புக் கட்டும் பூமணமும்
    காதல் கணவனின் திருப்பூட்டும்
யாப்பில் வடித்த தீந்தமிழாய்
    யாவரும் போற்ற அரங்கேறும்
மணமகள் மணமகன் கைகூப்பி
    மங்கல வாழ்த்தைப் பெற்றிடுவர்
தனம்மிகப் பெருகிட பணம்எழுதப்
    பங்கா ளிகளும் முனைந்திடுவர்.



## 82. கும்பிடு கட்டுதல்



கும்பிடு கட்டும் போதினிலே
குலத்தில் சிறக்கும் பெரியோர்கள்
நம்பியும் நங்கையும் நலம்வாழ
நல்வாழ்த் தினையே தந்திடுவர்
மஞ்சள் தன்னில் நீராடல்
மகிழ்ந்து நடக்கும் அதன்பின்னே
துஞ்சும் காப்பு கழட்டிடுவர்
கால்மோ திரமும் அணிந்திடுவர்.



## 83. பெண் அழைப்பு

பிள்ளை எடுக்கிக் காட்டியபின்
பெருமை உற்ற பெண்வீட்டார்
நல்ல நேரம் கண்ணுற்று
நலமாய் மகளை மணமகனின்
இல்லம் செல்ல அனுப்பிடுவர்
இயைந்து சிறக்கும் பெண்அழைப்பு
வல்ல இறைவன் அருளாலே
வாழ்க்கை துவங்கிடும் நலமுடனே!



## 84. சாமான் பரப்பும் கலை



செட்டி நாட்டுத் திருமணத்தில்
சிறப்பு சேர்க்கும் நற்கலையாம்
எட்டுத் திக்கும் சேகரித்த
எழில்வடி வான சாமான்கள்
உரியபெண் வீட்டார் உவந்தளிக்கும்
ஒருவகை முதலீ டிதுவாகும்
சிறியது பெரியது எனஅடுக்கிச்
சிறப்பாய்ப் பரப்புவர் அழகழகாய்!



# 17. நன்றி பாராட்டும் விழாக்கள்

## 85. சாந்திவிழா



திருக்கடை அனை (ய) கோயிலிலே
சிறந்த வாழ்க்கை நடத்திட்ட
அருமைத் தாய்க்கும் தந்தைக்கும்
அய்ம்பத் தொன்பது நிறைவினிலே
பெருமிதத் தோடு சாந்திவிழா
பெற்ற மக்கள் எடுத்திடுவர்!
கருவினில் இருந்து மக்களினைக்
காத்த பெற்றோர் மகிழ்ந்திடுவர்!



## 86. மணிவிழா



இல்லறக் கடமை இனிதாற்றி
இணைந்து வாழ்ந்த பெற்றோர்க்கு
நல்லற மாக நடக்கின்ற
நலமிகு திருமணம் அறுபதாகும்
வல்லப கணபதி அடிதொழுது
வளன்மனை ஜொலிக்க நடந்திடுமே!
உள்ளம் உறையும் உறவினர்கள்
உடன்பங் காளி கள் சூழ்ந்திருக்க



## 87. பெற்ற மக்கள் எடுக்கும் விழா

உண்மை உழைப்பு நாணயத்தால்
உயர்ந்து நிற்கும் பெற்றோர்க்கு
அன்புப் பேரன் பேத்திகளும்
அழகு மருமகள் மகனோடு
நன்றாய்ப் பேணும் மகளோடு
நலமே விழையும் மாப்பிள்ளையும்
நன்னாள் நட்சத் திரம்பார்த்து
நல்விழா மணிவிழா நிகழ்த்திடுவர்



## 88. வரவேற்பு

வாழை மரங்கள் வாசலிலே
வரவேற் கும் அவ் வேளையிலே
மேளச் சப்தம் முழங்கிடவே
மேலோர் பலரும் வாழ்த்திடவே
சித்திரை மாதப் பௌர்ணமியாய்
சிறக்கும் தாய்க்கும் தந்தைக்கும்
அத்தனை பேரும் போற்றிடவே
அழகாய் மணிவிழா நடந்திடுமே!





## 89. துணிமணி வழங்கல்

அருமைப் பெற்றோர் மணவறையில்
அமர்ந்து ஆசி நல்கிடுவர்
உரிமை உடைய உற்றார்க்கு
உவந்து துணிமணி வழங்கிடுவர்
மருமகள் மகன்மகள் மாப்பிள்ளை
மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கிடுவர்!
பெருமை மிக்க சமுதாயம்
பேருல குண்டோ சொல்லுங்கள்



## 90. அந்தணர்கள் வாழ்த்தொலி

தோரணம் வளவை வாசலினில்
தொடர்ந்து கட்டி அலங்கரிக்க
அறுபது நான்கு கலசங்களில்
அதி தேவதைகள் வீற்றிருக்க
மறைகளைக் கற்ற அந்தணர்கள்
மங்கல வாழ்த்தொலி முழங்கிடவே
பூரண கும்ப மரியாதை
பூஜைகள் தொடர்ந்து நடைபெறுமே.





## 91. நன்றி செலுத்தும் நல்விழா



அன்புப் பெற்றோர் அமர்ந்திருக்க
அவர்களைச் சுற்றி வலமாக
தண்ணீர் ஊற்றும் நல்நிகழ்வு
தகுதி கொண்டே நடந்தேறும்
இன்பம் பொங்கி உற்றார்கள்
இருவரை வணங்கி நலம்பெறுவர்
நன்றாய் வளர்த்த பெற்றோர்க்கு
நன்றி செலுத்துவர் பிள்ளைகளும்



## 92. பீமரத விழா / சதாபிஷேகம்

சப்த ரிஷிகளைப் போல்மனமும்
சஞ்சலம் இல்லா நிலையடைய
தப்பிதம் இன்றி எழுபதிலே
பீம ரத விழா நடந்திடுமே!
எண்பது வயதில் சதாபிஷேகம்
எட்டுத் திசைகளைக் காக்கின்ற
வன்மை மிக்க தெய்வங்கள்
வழிகாட் டிடவே நிகழ்ந்திடுமே!



## 93. கனகாபிஷேகம்

நவக்கி ரகங்கள் நல்லாசி
நலமே கிட்டும் தொண்ணூரில்
எவரும் வியக்க தம்பதிக்கு
எழில் விழா வாக நடந்தேறும்
ஆண்டு நூறு கண்டவுடன்
அடங்கும் ஐம்புலன் அறிவோமே!
ஈண்டு நடக்கும் நூறாண்டு
இறைவன் அருளால் கனகாபிஷேகம்!



## 18.நகரத்தார் சிறப்பு



### 94. முன்னோர் சொல் வேதம்

உண்மை உழைப்பு உயர்வுநலம்
ஒருங்கே பெற்ற நகரத்தார்
மன்றில் ஆடும் ஈசனையே
மனதில் போற்றித் துதிப்பவர்கள்
முன்னோர் சொல்லை மூச்சாக
முழுதும் கொண்டு வாழ்பவர்கள்
நன்றாய் செய்யும் கொடையாலே
நாட்டைச் சிறக்கச் செய்பவர்கள்!



### 95 முப்பால் நெறி



முப்பால் சொல்லும் நெறிபற்றி
முயன்று வாழும் செட்டியார்கள்
அப்படி இப்படி இருந்தாலும்
ஆச்சி சொல்லே வேதமென்று
ஒப்புக்கொண்டு வாழ்வதனால்
உலகில் நித்தம் சிறக்கின்றார்
தப்பே அறியாச் சமுதாயம்
தரணியில் இதுபோல் எங்குண்டு!



### 96. சிக்கனம்



செட்டி நாட்டு ஆச்சிகளும்
சிக்கனம் தன்னில் சிறந்தவர்கள்
வட்டியில் வரும் நல் வரும்படியில்
வகையாய்ச் சிலவு செய்பவர்கள்
கெட்டிக் காப்புக் கைகளிலே
கல கல வென்றே அணிபவர்கள்
மெட்டி மூன்று அணிபவர்கள்
மெல்லப் பேசிபின் அதிர்பவர்கள்



### 97. விருந்தோம்பல்



செட்டி மக்கள் விருந்தோம்பல்
சிறக்கும் மணக்கும் ஊரெங்கும்
கட்டிச் சமத்தி என்பார்கள்
கலைநயம் மிக்க ஆச்சிகளை
வெட்டிப் பேச்சு நிறைந்தாலும்
விவரம் பலவும் வெளியில் வரும்
எட்டி நிற்கும் செட்டியாரின்
ஏக்கம் மூச்சாய் பரவிதொழும்!

### 98. விலாசம்



கார்முகில் அனைய நலன்சேர்த்து
கடிது வாழ்ந்த முன்னோர்கள்
பேர்சொலும் இனம்தான் செட்டிஇனம்
பெருமை சாற்றும் உலகெங்கும்
ஆறு தலைமுறை முன்னெழுத்தை
அழகாய்ப் பெயரின் முன்வைத்துப்
பாரில் சிறக்கும் சமுதாயம்
பண்பட் டுயரும் எந்நாளும்

### 99. புள்ளி



புள்ளி வைத்தால் தான்கோலம்
புலப்படும் அதுபோல் நம்மரபில்
துள்ளித் திரியும் காளையெனத்
திகழும் மகனுக்கு மணம்செய்து
புள்ளி ஆக்கிப் பெருமை கொள்வர்
புவியில் சிறக்கச் செய்திடுவர்
பிள்ளை இல்லாக் குடும்பத்தார்
பிறன்மனைப் பிள்ளைத் தத்தெடுப்பர்

**100. திருநீறு**



ஞானம் தரும்நல் திருநீறு
ஞாபக சக்தியைக் கூட்டிடுமே!
ஊனில் கலந்து உயிர்வளர்க்கும்
உடலின் நாற்றம் போக்கிடுமே!
சூனியம் பில்லி துரத்திடுமே
சுடர் முகம் பொலிவு பெற்றிடுமே!
காணின் நகரத் தார் முகத்தை
கவின்நில வாகக் காட்டிடுமே!



**101. நலப்பணியில் நாட்டம்**

ஈட்டிய பொருளைத் தனக்காக
இயன்ற அளவு வைத்திடுவர்
நாட்டம் கொண்டே நலப்பணிகள்
நாளும் போற்றச் செய்திடுவர்
காட்டிய பாதை முன்னோர்கள்
கணக்காய்ப் பற்றி நடந்திடுவர்
நாட்டில் உயர்ந்த பதவிகளை
நலமாய்ப் பெற்றுச் சிறந்திடுவர்





**102. சாதனை இனம்**

அறிவில் சிறந்த நகரத்தார்
அகத்தில் அன்பு கொண்டவர்கள்
பெரிய முயற்சி கொண்டுதினம்
பெருந்தொழில் செய்து புகழ்சேர்ப்பர்
அரிது இவர்போல் ஓரினத்தை
அகிலம் காண்பது இனிமேலே
சிறிய இனம்தான் என்றாலும்
சிறந்த சாதனை கொண்டஇனம்



**103. நிகரில்லாத சமுதாயம்**

வெள்ளம் எனத்தன் மணவாளன்
விரும்பி அனுப்பும் பொருள்சேர்த்து
நல்லரண் மனையாய் வீட்டைக்கட்டி
நலத்தைக் காத்து நாள்தோறும்
நித்திரை இன்றி உழைக்கின்ற
நிகரில் லாத ஆச்சிமார்கள்
எத்தனை கோடி கொடுத்தாலும்
எச்சமு தாயமும் பெற்றதில்லை!



**104. பொருள் வளம்**




தயக்கம் இன்றி செட்டிமக்கள்
தரைவழி கடல்வழிப் பயணம் செய்து
மயக்கும் பர்மா அயலகத்தில்
மழைபோல் வளத்தைப் பெருக்கினரே!
வியக்கும் வண்ணம் பொருளீட்டி
விரும்பிப் பணத்தைக் கொணர்ந்ததனால்
செயமே கண்டனர் வாழ்வினிலே
செழிக்கக் கண்டது நம்குலமே!



**105. ஒப்பில்லாத உயர்ந்தகுலம்**

இப்படி வாழ்வதே வாழ்க்கையென
இயற்றினர் விதிகள் நம்மவர்க்கு
அப்படி வாழ்ந்து சிறப்போரை
அகிலம் விரும்பும் அறிந்தோமே!
தப்பிதம் இன்றி வாழ்கின்ற
தகுதி மிக்க செட்டிகுலம்
ஒப்பில் லாத உயர்ந்தகுலம்
உலகில் உண்டோ சொல்லம்மா!



## ஆசிரியர் பற்றி



- நூற்றாண்டுப் பெருமைமிகு காரைக்குடி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் வித்யாசாலா மேல்நிலைப்பள்ளியில் முதுகலைத் தமிழாசிரியர் பணி. கணிதம் கற்றவர்
- கவிஞராகவும், பேச்சாளராகவும், எழுத்தாளராகவும், நாடக ஆசிரியராகவும், சதுரங்கப் பயிற்றுனராகவும் திகழ்பவர். சில்வர் ஸ்டார் கழகத்தின் நிறுவனர், சிவகங்கை மாவட்டச் சதுரங்க கழக துணைத்தலைவர். சிவகங்கை மாவட்ட கவனகக் கலை மன்றத்தலைவர். இளையநிலா காலாண்டு இதழின் நிர்வாக ஆசிரியர்...
- **எழுதியுள்ள நூல்கள்:**
  விடியலைநோக்கி, மகனே மாடசாமி, உள்ளங்கையில் உலகம், உன்னால் முடியும் நம்பு, +2 தமிழ் வழிகாட்டி, படிப்பது நலமே! தேர்வும் சுகமே!
- **பெற்ற விருதுகள்:**
  Air India வின் 'Bolt Award', ஸ்ரீ ரெட்டியப்பட்டி சுவாமிகள் அறக்கட்டளையின் நல்லாசிரியர் விருது, 'Life Time Achievement Award in Chess' விருது, வள்ளுவர் பேரவையின் 'குறள்மணி' விருது. தினமலர் நாளிதழின் இலட்சிய ஆசிரியர் விருது, ஸ்ரீ சக்தி அகடமியின் Excellency Award-2014. காரைக்குடி மக்கள் மன்றத்தின் நாடகக் கவிஞர் விருது, சிறந்த நாட்டுநலப்பணிப் பணித்திட்ட அலுவலர் விருது, சென்னை நல்லழகம்மை செல்லப்பன் அறக்கட்டளையின் 'மதிப்புறு கவிஞர் - 2018' விருது, வரலாற்று நாயகர் - 2019 விருது.

வாழ்த்துக்களுடன்...

முனைவர் **ஜெ.பிரகாஷ்மணிமாறன்**, கணிதபட்டதாரி ஆசிரியர்
ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் வித்யாசாலா மேல்நிலைப் பள்ளி, காரைக்குடி.